# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்



(மூலமும், உரையும் - தமிழில் )

(பொருள் உணர்ந்து பாராயணம் செய்ய ஏற்ற நூல்)

உ

*ஸ்ரீ மஹா கணபதி துணை*

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

*(மூலமும், உரையும் - தமிழில் )*

*(பொருள் உணர்ந்து பாராயணம் செய்ய ஏற்ற நூல்)*

*உரை ஆசிரியர்*

**அபிராமி தாஸன்**

**மீனாட்சி சுந்தரம் மோகன்**

*முதற் பதிப்பு : நவம்பர் 2020*



**ரூபாய். 100/-**

***ப்ரதிகள் கிடைக்குமிடம்***

***ஸ்ரீமதி ரேணுகா மோகன்***

*18, 11வது தெரு, நந்தனம் விரிவு,*

*சென்னை - 600 035.*

*போன் : 044 - 2435 0162*

*செல் : 89399 49749*

*ஒளி அச்சு*

***ஸ்ரீ அபிராமி மைந்தன்***

***அச்சிட்டோர் :***

***ஜெய் கணேஷ் ஆப்செட் பிரிண்டர்ஸ்***

*19, வெங்கடசாமி லேன், சாந்தோம்,*

*சென்னை - 600 004. செல் : 98401 11457*

உ

ஸ்ரீமாதா அபிராமி

# அணிந்துரை

அடியேனது ஆப்த நண்பர் அபிராமிதாஸன் மோகன் அவர்கள் ஆன்மீகத் துறையில் பல வருடங்களாகப் பல அரிய நூல்களுக்கு (அபிராமி அந்தாதி, அபிராமி பட்டரின் பதிகங்கள், அபயாம்பிகை சதகம், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்) விளக்கவுரை எழுதி பக்தர்களைப் பரவசப்படுத்தி வருகிறார். வெளியூர்கள் சென்று ப்ரவசனமும் செய்து வருகிறார்.

அவர்கள் எழுதும் உரை சுருக்கமாகவும், தெளிவாகவும், பாமரர்களும் புரிந்து கொள்ளும் வகையில் இருப்பது ஒரு சிறப்பம்சம். அவர் எழுதிய இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாம தோத்திர நூலுக்கு அணிந்துரை எழுதுவதை என் பாக்யமாகக் கருதுகிறேன்.

அனைத்து அகிலமும் கொரோனா வியாதியால் திண்டாடி, கதிகலங்கும்போது, அவர் ஸ்ரீ விஷ்ணு ஸைஸ்ரநாமாவிற்கு விளக்கவுரை எழுதியிருப்பது மிகச் சிறந்த புண்ய காரியம் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

''சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரம்'', என்று திரு மாணிக்கவாசகர் குறிப்பிட்டபடி, இந்த ஸ்ரீ ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை பொருள் உணர்ந்து சொல்வார் நிச்சயம் இம்மையிலேயே இன்பமான வாழ்க்கை எய்துவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

தொடர்ந்து இம்மாதிரியான ஆன்மீக நூல்களை எழுதி ஆன்மீக துறையில் உயர அபிராமிதாஸன் மோகன் அவர்களுக்கு நீண்ட ஆயுளையும், நல்ல ஆரோக்கியத்தையும் தந்து அருளுமாறு எல்லாம் வல்ல பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை பிரார்த்திக்கிறேன்.

ஹரி: ஓம் தத் ஸத்
ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணம் அஸ்து
இதி சிவம்

**L. ரமணி**

உ

ஸ்ரீ மஹா கணபதி துணை

# ஆசிரியர் உரை

*குருவருள் இல்லையேல் திருவருள் இல்லை.*
*''ஸ்ரீ குரு: ஸர்வ காரண பூதா - சக்தி:'' - (பாவனோபநிஷத்து)*

ஸ்ரீ வித்யா பரம்பரா குருமண்டலத்திற்கு இந்த நூலைச் சமர்ப்பிக்கிறேன்.

இந்த நூலை எழுத ஆரம்பிக்கும்போது, முதற் கண் என் நினைவில் நின்றது அடியேனுடைய அக்காவும், ஆசானாகவும் விளங்கிய திருமதி. சீதா பாலசுப்ரமண்யம் அவர்கள். ஸ்ரீஸ்ரீஸ்ரீ சிதானந்த நாதரின் நேர்சிஷ்யை. ஸ்ரீஸ்ரீஸ்ரீ டாக்டர் சிவானந்தரிடம் உபதேசம் பெற்றவர். விரதங்கள் அனுஷ்டிப்பதிலும், பூஜைகள் செய்வதிலும், ஸஹஸ்ரநாம பாராயணங்கள் செய்வதிலும் அவருக்கு நிகர் அவரே. பக்தியில் சிரத்தை வேண்டும் என்பார் பெரியோர். அதற்கு உதாரணமாய் திகழ்ந்தவர். எனக்கு வடமொழி சொல்லித் தந்தவர். ஸஹஸ்ர நாமத்தின் சூஷ்ம பொருளையும் விளக்கியவர். வடமொழியில் M.A. பட்டம் பெற்றவர். அடியேனது தாயாருக்கு உற்ற உதவியாக (வலது கரமாக ) ஆன்மீகத் தொண்டு செய்தவர்.

''உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு'', என்ற திருக்குறளுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறார் அணிந்துரை அருளிய அருமை நண்பர் திரு L. ரமணி அவர்கள். அறுபத்தி ஐந்து வருட காலமாக தினமும் தவறாது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்து வரும் இவர் அடியேனுக்கு அருளிய அணிந்துரை, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே அருளிய அருட் பிரசாதமாகக் கருதி அனைத்து பக்தர்களுடனும் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். அவர் தீர்க்காயுசுடனும் நோய் நொடிகள் இல்லாமலும் வாழ ஸ்ரீ கிருஷ்ண பரமாத்வாவைப் பிரார்த்திக்கிறேன்.

அடியேனின் உற்றார், உறவினர், நண்பர்கள் - இந்நூலை அடியேன் எழுத ஆரம்பித்த உடனேயே தாங்களாகவே முன்வந்து செய்த உதவிக்கு நன்றி சொல்ல வார்த்தைகள் இல்லை.

இந்நூலுக்கு ஒளி அச்சு வடிவமைப்பு செய்த திரு. அபிராமி மைந்தன், குறித்த நேரத்தில் அச்சிட்டு வழங்கிய ஜெய்கணேஷ் ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. ரவி அவர்களுக்கும் மனமார்ந்த நன்றி.

குற்றம் குறை இருப்பின் அடியேனை மன்னித்து அருள வேண்டும். அக்குற்றங்களைச் சுட்டிக் காட்டினால் அடுத்த அச்சில் சரி செய்து விடுகிறேன்.

இந்நூல் ஆன்மீக வளர்ச்சிக்கும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அருளைப் பெறுவதற்கும் ஒரு தூண்டுகோலாயின் அது அடியேன் செய்த பாக்யமாகும்.

அபிராமிதாசன்
**மீனாட்சி சுந்தரம் மோகன்**

உ

குருவடி சரணம் திருவடி சரணம்

ஸ்ரீ மாதா அபிராமி

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ஸ்ரீ பிதாமகர் பீஷ்மருக்கு ஆயிரம் கோடி நமஸ்காரம்

ஸ்ரீ குருப்யோ நம:

ஸ்ரீ குருவின் திருவடிகளுக்கு நமஸ்காரம்

ஓம்

**சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் ।**
**ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வவிக்நோபசாந்தயே ।1।**

வெண்ணிற ஆடை தரித்தவரும் எங்கும் நிரம்பியவரும் சந்திரனுக்கு ஒப்பான மேனிவண்ணம் கொண்டவரும் நான்கு கைகள் உள்ளவரும் மதம் பிடித்த யானை முகமுள்ளவருமான விநாயகப் பெருமானை நினைவிற் கொள்ளவும்.

**யஸ்யத்விரதவக்த்ராத்யா: பாரிஷத்யா: பர: சதம் ।**
**விக்நம் நிக்நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாச்ரயே ।2।**

கஜவக்திரர் முதலான நூற்றுக் கணக்கானவர் எவரைச் சூழ்ந்திருப்பவர்களாகி எப்பொழுதும் இடையூறுகளை நீக்குகின்றாரோ, அந்த விஷ்வக்ஸேனரைச் சரணடைகிறேன்.

**வ்யாஸம் வஸிஷ்ட நப்தாரம் சக்தே:**
**பௌத்ர-மகல்மஷம் ।**
**பராசராத்மஜம் வந்தே சுகதாதம் தபோநிதிம் । 3 ।**

வஸிஷ்டரின் கொள்ளுப்பேரரும், சக்தியின் பேரரும், பராசரரது புத்திரரும், சுகரது தந்தையும் மாசற்றவரும் தவத்தின் பாதுகாப்பகமுமான வியாஸரை வணங்குகிறேன்.

**வ்யாஸாய விஷ்ணு ரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே ।**
**நமோ வை ப்ரஹ்மநிதயே வாஸிஷ்டாய நமோ நம: ।4।**

விஷ்ணு வடிவில் உள்ள வியாஸருக்கும் வயாஸா் வடிவில் உள்ள விஷ்ணுவிற்கும் நமஸ்காரம். தவத்திற்குக் காப்பிடமான வஸிஷ்ட வம்சத் தோன்றலான அவருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

**அவிகாராய சுத்தாய நித்யாய பரமாத்மநே ।**
**ஸதைக ரூப ரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே । 5 ।**

மாறுபாடு இல்லாதவரும், தூயவரும், என்றும் உள்ளவரும், பரம்பொருளும், எப்போதும் நிலைத்த வடிவுள்ளவரும், எல்லோரையும், எப்போதும் வெல்பவரும் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவருமான விஷ்ணுவிற்கு நமஸ்காரம்.

**யஸ்ய ஸ்மரணமாத்ரேண ஜந்மஸம்ஸாரபந்தநாத் ।**
**விமுச்யதே நமஸ்தஸ்மை விஷ்ணவே**
**ப்ரபவிஷ்ணவே । 6 ।**

**ஓம் நமோ விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே ।**

எவரை நினைத்த அளவிலேயே பிறவியிலிருந்து தொடர்கிற கட்டில் இருந்தும் மனிதன் விடுபடுகிறானோ, அந்த எல்லாம் வல்ல விஷ்ணுவிற்கு நமஸ்காரம். அந்த எல்லாம் வல்ல விஷ்ணுவிற்கு நமஸ்காரம்.

**ஸ்ரீ வைசம்பாயந உவாச**

**ச்ருத்வா தர்மா நஸேஷேண பாவநாநி ச ஸர்வச: ।**
**யுதிஷ்டிர: சாந்தநவம் புநரேவாப்ய பாஷத । 7 ।**

**வைசம்பாயனர் கூறினார்:-**

தர்மங்களையும், தூய்மைப்படுத்துபவைகளையும் பற்றி ஒன்றும் விடப்படாமல் முழுவதும் கேட்ட யுதிஷ்டிரர், சந்தனுவின் குமாரரான பீஷ்மரை மறுபடி அணுகிக் கேட்டார்.

*யுதிஷ்டிர உவாச*

**கிமேகம் தைவதம் லோகே கிம் வாப்யேகம் பராயணம்**
**ஸ்துவந்த: கம் கமர்சந்த: ப்ராப்நுயுர்மாநவா: சுபம் ।8।**

*யுதிஷ்டிரர் பேசினார்:-*

சிறந்த ஒரே தெய்வம் எது? அடைவதற்கு மேலான நிலை எது? எந்த தெய்வத்தை அவரது குணச்சிறப்புகளைப் புகழ்ந்து பாடியும், அவரது உருவத்தை புறத்தே மனத்தினுள்ளே பல முறைகளால் வழிபட்டும் மனிதர்கள் மங்களம் பெறுவார்கள்?

**கோ தர்ம: ஸர்வதர்மாணாம் பவத: பரமோ மத: ।**
**கிம் ஜபன் முச்யதே ஜந்து: ஜன்ம-ஸம்ஸார**
**பந்தனாத்।9।**

எல்லா வழிபாட்டு நெறிகளிலும் சிறந்த நெறியாகத் தங்கள் விருப்பிற்கும் கருத்திற்கும் ஏற்றது எது? எதனை ஜபித்துக் கொண்டிருக்கும் மனிதன் பிறப்பால் தொடர்கிற கட்டிலிருந்தும் விடுபடுகிறான்?

*ஸ்ரீ பீஷ்ம உவாச*

**ஜகத்ப்ரபும் தேவதேவ மநந்தம் புருஷோத்தமம் ।**
**ஸ்துவந்நாம ஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்தித: । 10 ।**

**தமேவ சார்சயந்நித்யம் பக்த்யா புருஷமவ்யயம் ।**
**த்யாயந் ஸ்துவந்நமஸ்யம்ச்ச யஜமாநஸ்தமேவ ச ।11।**

**அநாதி நிதநம் விஷ்ணும் ஸர்வலோக மஹேச்வரம் ।**
**லோகாத்யக்ஷம் ஸ்துவந்நித்யம் ஸர்வ து:காதிகோ**
**பவேத் । 12 ।**

**ப்ரஹ்மண்யம் ஸர்வ தர்மஜ்ஞம் லோகாநாம் கீர்தி வர்தநம் ।**
**லோகநாதம் மஹத்பூதம் ஸர்வபூத பவோத்பவம் ।13।**

ஸகஸ்ரநாமத்தால் யாரைத் துதிப்பது? விஷ்ணும் என்பது விடை.

பீஷ்மர் விடை தருகிறார்:- உலகிற்கு உடையவரும், தேவர்களுக்கும் தேவரும், இடம், பொருள், காலம் இவற்றில் அடங்காதவரும், காரிய, காரணப் பொருள் இவற்றைவிட மேம்பட்டவரும், இறைவனை இடைவிடாத முயற்சியுள்ளவன் பேராயித்தால் புகழ்ந்து பாட, எல்லா துக்கங்களையும் கடந்து விடுவான். அழிவும் மாறுபாடும் அற்று நீங்காதிருக்கும் அவரையே தினமும் பக்தியுடன் வழிபட்டும், தியானித்தும், துதித்தும் வணங்கியும் அவரைக் குறித்து வேள்வி புரிந்தும் வருபவன் எல்லா துக்கங்களையும் கடந்து விடுவான். பிரும்மனுக்கும், அந்தணனுக்கும் வேதத்திற்கும் தவத்திற்கும் இதம் தருபவரும், எல்லா அறநெறிகளையும் உணர்ந்தவரும் மக்களின் புகழை வளர்ப்பவரும், உலகின் நாதனும் எல்லாப் பொருள்களுக்கும் மேலாகப் பெரிதாகச் சிறந்து விளங்கும் உண்மையான பொருளும், எல்லாப் பொருள்களின் இருக்கைக்கும் தோற்றுவாயுமானவரை தினமும் துதிப்பவன் எல்லா துக்கங்களையும் கடந்து விடுவான். (10 - 13)

''ஸர்வதுக்காதிகோ பவேத்'' - ''எல்லா துக்கங்களையும் கடந்து விடுவான்'' என்று பன்னிரண்டாவது ஸ்லோகத்திலுள்ள பகுதி மற்ற மூன்று ஸ்லோகங்களுடனும் இணைகிறது.

**ஏஷ மே ஸர்வ தர்மாணாம் தர்மோதிக தமோமத: ।**
**யத்பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந்நர: ஸதா ।14।**

பக்தியுடன் புண்டரீகாக்ஷனைத் துதிகள் மூலம் மனிதன் எப்போதும் வழிபடுவதே எல்லா தர்மங்களிலும் சிறந்த தர்மம் என்பது என் கருத்து.

**பரமம் யோ மஹத்தேஜ: பரமம் யோ மஹத் தப: ।**
**பரமம் யோ மஹத்ப்ரஹ்ம பரமம் ய: பராயணம் ।15।**

**பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களாநாம் ச மங்களம்।**
**தைவதம் தேவதாநாம் ச பூதாநாம் யோவ்யய: பிதா ।16।**

**யத: ஸர்வாணி பூதாநி பவந்த்யாதி யுகாகமே ।**
**யஸ்மிம்ச்ச ப்ரலயம் யாந்தி புநரேவ யுகக்ஷயே । 17 ।**

**தஸ்ய லோக ப்ரதாநஸ்ய ஜகந்நாதஸ்ய பூபதே ।**
**விஷ்ணோர்நாம ஸஹஸ்ரம் மே ச்ருணு பாப பயாபஹம் । 18 ।**

அரசே! எவர் மிகச் சிறந்த பேரோளியோ, எவர் மிகச் சிறந்த பேராளுமையோ, எவர் பெரிதிலும் பெரிதான பிரும்மமோ, எவர் மிகச் சிறந்த நிலையோ, எவர் தூயவைகளுக்கும் தூயவரோ, மங்களங்களுக்கும் மங்களமோ, தேவதைகளுக்கும் தேவரோ, எவர் உயிரினம் அனைத்திற்கும் அவர்களை விட்டகலாத தந்தையோ, படைப்பு தொடங்கிய யுக ஆரம்பத்தில் எவரிடமிருந்து உயிரினம் அனைத்தும் உண்டாகின்றதோ, மறுபடியும் யுக முடிவில் எவரிடம் ஒடுங்குகின்றனவோ, அத்தகைய உலகிற்கு இன்றியமையாதவரும், உலகின் நாதருமான விஷ்ணுவின் பேராயிரத்தை - பாபத்தின் பயத்தைப் போக்கவல்ல பேராயிரத்தை என்னிடமிருந்து கேட்பாய்! (15 - 18)

**யாநி நாமாநி கௌணாநி விக்யாதாநி மஹாத்மன: ।**
**ருஷிபி: பரிகீதாநி தாநி வக்ஷ்யாமி பூதயே । 19 ।**

அந்தப் பெருமானின் பெயர்கள் குணச் சிறப்பு கொண்டு ஏற்பட்டவை. உலகில் வழக்கில் உள்ளவை. முற்றும் உணர்ந்த முனிவர்களால் உணர்ந்து பாடப் பெற்றவை. நலம் பெற அவற்றைக் கூறுவேன்.

**ருஷிர்நாம்நாம் ஸஹஸ்ரஸ்ய வேதவ்யாஸோ மஹாமுநி:।**
**சந்தோநுஷ்டுப் ததா தேவோ பகவாந் தேவகீஸுத: । 20।**

**அம்ருதாம் சூத்பவோ பீஜம் சக்திர்தேவகிநந்தந: ।**
**த்ரிஸாமா ஹ்ருதயம் தஸ்ய சாந்த்யர்தே விநியுஜ்யதே ।21।**

**விஷ்ணும் ஜிஷ்ணும் மஹாவிஷ்ணும் ப்ரபவிஷ்ணும் மஹேச்வரம் ।**
**அநேகரூப தைத்யாந்தம் நமாமி புருஷோத்தமம் । 22 ।**

இந்த பேராயிரத்திற்கும் வேத வியாஸ முனியானவர் ருஷி. அனுஷ்டுப் என்பது சந்தஸ். தேவகியின் குமாரன் தேவதை.

அம்ருதாம்சூத்பவ: என்ற நாமம் பீஜம். தேவகீநந்தன: என்ற நாமம் சக்தி. த்ரிஸாமா எனும் நாமம் ஹ்ருதயம். அமைதி பெறும் பொருட்டு (இந்த பாராயணம்) பயன்படுத்தப்படுகிறது. எங்கும் நிரம்பியவரும், வெல்வதையே வழக்கமாகக் கொண்டவரும், எல்லாம் வல்லவரும், பெருந்தேவரும், பல வடிவுள்ளவரும், அசுரர்களுக்கு முடிவைத் தருபவரும், புருஷோத்தமருமான மஹா விஷ்ணுவை வணங்குகிறேன். (20 - 22)

*பூர்வந்யாஸ:*

அஸ்ய ஸ்ரீ விஷ்ணோர்திவ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய। ஸ்ரீ வேதவ்யாஸோ பகவாந் ருஷி: । அநுஷ்டுப் சந்த: ந। ஸ்ரீ மஹாவிஷ்ணு: பரமாத்மா ஸ்ரீமந் நாராயணோ தேவதா ।

அம்ருதாம்சூத்பவோ பானுரிதி பீஜம் ந தேவகீநந்தந: ஸ்ரஷ்டேதி சக்தி: । உத்பவ:, க்ஷோபணோ தேவ: இதி பரமோமந்த்ர: । சங்கப்ருந் நந்தகீ சக்ரீதி கீலகம் । சார்ங்கதன்வா கதாதர இத்யஸ்த்ரம் । ரதாங்கபாணி ரக்ஷோப்ய இதி நேத்ரம் । த்ரிஸாமாஸாமக: ஸாமேதி கவசம் । ஆநந்தம் பரப்ரஹ்மேதி யோநி: । ருது: ஸுதர்சன: கால இதி திக்பந்த: ।

ஸ்ரீ விச்வரூப இதி த்யாநம் ।

## ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ரீத்யர்தே ஸஹஸ்ரநாம ஜபே பாராயணே விநியோக: ॥ 23 ॥

இந்த விஷ்ணு ஸகஸ்ரநாம ஸ்தோத்திரம் என்ற மஹா மந்திரத்திற்கு பகவான் ஸ்ரீ வேத வியாஸர் ருஷி, அனுஷ்டுப் எனும் சந்தஸ், மஹாவிஷ்ணுவாகிய பரம்பொருள் ஸ்ரீமந் நாராயணன் தேவதை. அம்ருதாம்சூத்பவ: பானு: என்ற நாமங்கள் பீஜம், தேவகீநந்தந: ஸ்ரஷ்டா என்ற நாமங்கள் சக்தி. உத்பவ: க்ஷோபண: தேவ: என்ற நாமங்கள் பரமமான மந்திரம். சங்கப்ருத் நந்தகீ சக்ரீ என்ற நாமங்கள் கீலகம். சார்ங்கதன்வா கதாதர: என்பது அஸ்திரம். ரதாங்க பாணி: அக்ஷோப்ய: என்ற நாமங்கள் நேத்திரம். த்ரிஸாமா ஸாமக: ஸாம என்பது கவசம். ஆனந்தம் பரப்ரஹ என்பது யோநி. ருது: ஸுதர்சன: கால: என்று திக்பந்தம். ஸ்ரீ விச்வரூப: என்று தியானம். ஸ்ரீ மஹாவிஷ்ணுவிற்கு பிரியமாகும் பொருட்டு இந்த ஸஹஸ்ரநாம ஜபம் செய்வதே பயன். (ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் கைங்கர்யமாக அமையும் ஸஹஸ்ரநாம ஜபம் செய்வதே பயன்).

த்யானம்

**க்ஷீரோதன்வத் ப்ரதேச சுசிமணி விலஸத்ஸைகதை மௌக்திகாநாம்**
**மாலாக்லுப்தாஸநஸ்த்த: ஸ்படிகமணிநிபைர் -**
**மௌக்திகைர் மண்டிதாங்க: ।**
**சுப்ரை-ரப்ரை ரதப்ரை-ருபரிவிரசிதைர் முக்தபீயூஷ வர்ஷை:**
**ஆநந்தீ ந: புனீயாதரி நலினகதா சங்கபாணிர்முகுந்த: ।24।**

தூய ஒளியுள்ள ரத்தினங்கள் போன்று அழகுற்ற, மணல் பரப்புள்ள திருப்பாற்கடலில் முத்து மாலைகளான ஆஸனத்தில் அமர்ந்தவரும், ஸ்படிகமணி போன்ற முத்துக்களால் ஆன அணிகளால் அலங்கரிக்கப்பெற்ற திருமேனி உள்ளவரும், தனது திவ்ய ஆஸனத்தில் மேற்கட்டியாக அமைந்துள்ள அமுத மழை சொரிந்து

வெளுத்த தூய மேங்களால் ஆனந்திப்பவரும், சக்ரம், தாமரைப்பூ, கதை, இவைகளைக் கையில் கொண்டவருமான முகுந்தன் நம்மைத் தூயவராக ஆக்குவாராக!

**பூ: பாதௌ யஸ்ய நாபிர்-வியதஸூரநிலஸ் சந்த்ர ஸூர்யௌ ச நேத்ரே**
**கர்ணாவாசா: சிரோத்யௌர்-முகமபி தஹனோ யஸ்ய வாஸ்தேயமப்தி: ।**
**அந்தஸ்த்தம் யஸ்ய விச்வம் ஸுர நரககோத்**
**போசி-கந்தர்வ-தைத்யை:**
**சித்ரம் ரம் ரம்யதே தம் த்ரிபுவன வபுஷம் விஷ்ணு மீசம் நமாமி । 25 ।**

। ஓம் நமோ பகவதே வாஸுதேவாய ।

எவருக்கு பூமி இருகால்களோ, ஆகாசம் தொப்புள் பகுதியோ, வாயு பிராணவாயுவோ, சந்திரனும் ஸூர்யனும் இரு கண்களோ, திக்குகள் இருகாதுகளோ, வானுலகம் தலையோ, அக்னி வாயோ, கடல் சிறுநீர்கமோ (சிறுநீரோ), எவருடைய உடலினுள் அமைந்த இவ்வுலகம் தேவர்கள், மனிதர்கள் ஆகாயத்தில் செல்பவை, கால்நடைகள், பாம்பு முதலிய ஊர்வன, கந்தவர்கள், அஸூரர்கள் இவர்களால் விசித்திரமாகப் பலவாறாகத் தோன்றி, இன்பமாக அனுபவிக்கப் பெறுகிறதோ, மூவுலகையும் வடிவாகக் கொண்ட அந்த எங்கும் நிரம்பிய ஆண்டவனை வணங்குகிறேன்.

**। பகவான் வாசுதேவனுக்கு வணக்கம் ।**

**சாந்தாகாரம் புஜகசயநம் பத்மநாபம் ஸுரேசம்**
**விச்வாதாரம் ககநஸத்ருசம் மேகவர்ணம் சுபாங்கம் ।**
**லக்ஷ்மீகாந்தம் கமலநயநம் யோகிஹ்ருர்த்**
**தியானகம்யம்**
**வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைகநாதம்**
**। 26 ।**

சாந்த வடிவினரும் பாம்பை பள்ளியணையாகக் கொண்டவரும் தாமரையை ஒத்த கொப்பூழையுடையவரும், தேவர்களின் ஈசனும் உலகின் ஆதாரமும், ஆகாயம் போன்றவரும், மேக நிறம் கொண்டவரும் சுப லக்ஷணங்கள் அமைந்த அங்கங்கள் உள்ளவரும், லக்ஷ்மீ தேவிக்கு இனியவரும், தாமரைக் கண்ணரும், யோகினிகளின் ஹ்ருதயத்தில் அவர்களது தியானத்தால் உணரத்தக்கவரும், ஸம்ஸார பயத்தை நீக்குபவரும், எல்லா உலகிற்கும் தனி நாயகராக விளங்குபவருமான விஷ்ணுவை வணங்குகிறேன்.

**மேகச்யாமம் பீதகௌஶேயவாஸம்**
**ஶ்ரீவத்ஸாகம் கௌஸ்துபோத்பாஸிதாங்கம் ।**
**புண்யோபேதம் புண்டரீகாயதாக்ஷம்**
**விஷ்ணும் வந்தே ஸர்வலோகைகநாதம் ॥ 27 ॥**

மேகம் போன்று கருநீல நிறமுள்ளவரும் செம்மஞ்சள் நிறமுள்ள பட்டாடை உடுத்தியவரும், ஶ்ரீவத்ஸம் எனும் மறுவைச் சிறப்படையாளமாக கொண்டவரும், கௌஸ்துபம் எனும் மணியால் ஒளிபெற்ற மார்பகமுள்ளவரும் புண்ணியத்தால் அருகில் நெருங்கப் பெறுபவரும், தாமரை போன்று அலர்ந்து விரிந்த கண்களுள்ளவரும், எல்லா உலகங்களுக்கும் ஒப்பற்ற தலைவருமான விஷ்ணுவை வணங்குகிறேன்.

**நம: ஸமஸ்த பூ₄தானாம் ஆதி₃ பூ₄தாய பூ₄ப்₄ருதே ।**
**அநேகரூப ரூபாய விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே ॥ 28॥**

எல்லாப் பொருள்களுக்கும் மூலப் பொருளாக, தான் படைத்த பூமியைத் தாங்குபவராக, பல வகைப்பட்ட வடிவங்கள் உள்ளவராக, எல்லாம் வல்லவராக விளங்கும் விஷ்ணுவிற்கு நமஸ்காரம்.

**ஸசங்கசக்ரம் ஸகிரீடகுண்டலம்**
**ஸபீதவஸ்த்ரம் ஸரஸீருஹேக்ஷணம் ।**
**ஸஹார வக்ஷ:ஸ்தல ஶோபி கௌஸ்துபம்**
**நமாமி விஷ்ணும் சிரஸா சதுர்புஜம் ॥29॥**

சங்கு சக்ரம் உள்ளவரும் கிரீடம் குண்டலம் உள்ளவரும் செம்மஞ்சள் நிறத்தாடை உள்ளவரும் தாமரைக் கன்னமும் மாலையுடன் கூடிய மார்பகத்தில் அழகுடன் விளங்கும் கௌஸ்துபமுள்ளவரும் நான்கு கைகளுள்ளவருமான விஷ்ணுவைத் தலையால் வணங்குகிறேன்.

**சாயாயாம் பாரிஜாதஸ்ய ஹேமஸிம்ஹாஸநோபரி**
**ஆஸீநமம்புதச்யாமமாயதாக்ஷமலங்க்ருதம் । 30 ।**

**சந்த்ராநநம் சதுர்பாஹும் ஸ்ரீவத்ஸாங்கித வக்ஷஸம்**
**ருக்மிணீ ஸத்யபாமாப்யாம் ஸஹிதம்**
**க்ருஷ்ணமாச்ரயே । 31।**

பாரிஜாத மரத்தின் நிழலில் தங்க சிங்காதனத்தின் மேல் அமர்ந்தவரும், மேகத்தைப் போல் கருநீல நிறமுடையவரும், நீண்டு விரிந்த கண்களுள்ளவரும், அணிகள் பூண்டவரும், சந்திரனைப் போன்று அழகிய முகமுள்ளவரும் நான்கு கைகள் உள்ளவரும், ஸ்ரீவத்ஸத்தால் அடையாளமிடப்பட்ட மார்பகங்களுள்ளவரும், ருக்மிணி, ஸத்யபாமாவுடன் கூடியவருமான கிருஷ்ணனைச் சரணமடைகிறேன். (30 - 31)

## விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள்

ஹரி: ஓம்

**விச்வம் விஷ்ணுர் வஷட்காரோ பூதபவ்யபவத்ப்ரபு: ।**
**பூதக்ருத் பூதப்ருத் பாவோ பூதாத்மா பூதபாவன: । 1 ।**

1. விச்வம் : அனைத்தும் தாமாயிருப்பவர் - பூர்ணர்

2. விஷ்ணு: உள்ளும் வெளியும் பரவியிருப்பவர். எங்கும் நிறைந்திருப்பவர்.

3. வஷட்கார: வசப்படுத்துபவர்

4. பூத பவ்ய பவத் ப்ரபு: முக்காலத்திற்கும் பிரபு

5. பூதக்ருத்: தோன்றியதனைத்தையும் படைத்தவர். அவ்வாற சிதைத்தவர்.

6. பூதப்ருத்: தோன்றியதனைத்தையும் தாங்குபவர்.

7. பாவ: எல்லாவற்றின் இருக்கையாகவும் இருக்கும் பொருளாகவும் இருப்பவர்.

8. பூதாத்மா: எல்லாவற்றிக்கும் ஆத்மாவாக இருப்பவர்

9. பூதபாவந: தோன்றியதனைத்தையும் வாழச் செய்பவர்.

**பூதாத்மா பரமாத்மா ச முக்தாநாம் பரமா கதி: ।**
**அவ்யய: புருஷ: ஸாக்ஷீ க்ஷேத்ரஜ்ஞோ(அ)க்ஷர ஏவ ச ।2।**

10. பூதாத்மா : தூய ஆத்மா, பரிசுத்த ஸ்வபாவமுள்ளவர் (பற்றற்றவர்)

11. பரமாத்மா : எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட ஆத்மா

12. முக்தா நாம் பரமாகதி: முக்தி பெற்றவர்களுக்குச் சிறந்த கதியாய் இருப்பவர்

13. அவ்யய : அழிவும் மாறுபாடற்றவர். நீங்காதவர்

14. புருஷ : புரத்தில் இருப்பவர். எதற்கும் முன்னிருந்தவர். நிறைவுறக் கொடுப்பவர்

15. ஸாக்ஷீ : எல்லாவற்றையும் நேரிடையாக உணர்பவர்.

16. க்ஷேத்ரஜ்ஞ: க்ஷேத்திரத்தை அறிந்தவர். அதாவது க்ஷேத்ரம் எனப்படும் சரீரத்தை அறிபவர்.

17. அக்ஷர : அழிவற்றவர்.

**யோகோ யோகவிதாம் நேதா ப்ரதான புருஷேச்வர: ।**
**நாரஸிம்ஹ வபு: ஸ்ரீமான் கேசவ: புருஷோத்தம: ।3।**

18. யோகோ: யோகத்தால் அடையத்தக்கவர்.

19. யோகவிதாம் நேதா: யோகத்தை அறிந்தவர்களுடைய தலைவர்.

20. ப்ரதான புருஷேச்வர: பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் ஈச்வரன்.

21. நாரஸிம்ஹவபு: மனித வடிவும் சிங்க வடிவும் கலந்த உடல் கொண்டவர்.

22. ஸ்ரீமான்: மார்பில் ஸ்ரீதேவி நீங்காதுறைவதால் மனதைக் கவரும் வடிவினர்.

23. கேசவ: அழகிய கூந்தலை உடையவர்

24. புருஷோத்தம: புருஷர்களில் சிறந்தவர்.

(பரம்பொருளின் ஆணழகு - ராமனிடமும் கண்ணணிடமும்.

பெண்ணழகு - லலிதையிடம் காண்பதாகப் புராணம் கூறும்)

**ஸர்வ: சர்வ: சிவ: ஸ்தாணுர் பூதாதிர் நிதிரவ்யய: ।**
**ஸம்பவோ பாவனோ பர்த்தா ப்ரபவ: ப்ரபுரீச்வர: । 4 ।**

25. ஸர்வ: எல்லாமாயிருப்பவர்

26. சர்வ: (ஸம்ஹார காலத்தில்) பிரஜைகளை அழிப்பவர்

27. சிவ: மங்களமாயிருப்பவர் (பரிசுத்தர்)

28. ஸ்தாணு: ஸ்திரமாயிருப்பவர்

29. பூதாதி: தோன்றுகின்ற பொருளனைத்திற்கும் முதற் காரணமாயிருப்பவர்.

30. நிதி அவ்யய: அழியாத நிதி

31. ஸம்பவ: (நல்லோரைக் காக்கவும், தீயோரைப் போக்கவும்) அவதாரம் செய்பவர். (சம்பவாமி யுகே: யுகே:)

32. பாவன: (எல்லா பலன்களையும்) அளிப்பவர்

33. பர்த்தா: (ப்ரபஞ்சத்தில்) ஆதாராமாயிருந்து தாங்குபவர்

34. ப்ரபவ: உயர்ந்த ஜன்மமுடையவர்.

35. ப்ரபு: மிக்க ஸாமர்த்தியமுள்ளவர். எல்லாம் வல்லவர்.

36. ஈச்வர: அனைத்தையும் அடக்கியாள்பவர்.

**ஸ்வயம்பூ: சம்பு ராதித்ய: புஷ்கராக்ஷோ மஹாஸ்வன:।**
**அநாதிநிதநோ தாதா விதாதா தாது-ருத்தம: । 5 ।**

37. ஸ்வயம்பூ: தான் தானாகவே உண்டாகியவர். (தானே ஆனவர்)

38. சம்பு: சுகத்தை அளிப்பவர்

39. ஆதித்ய: சூரிய மண்டலத்தில் உறையும் பரம புருஷர். (அதிதியின் குமாரர்) சூரியன் போல அனைத்திற்கும் ஒளிதருவதால் - ஆதித்யன் எனும் உவமைப் பெயர்.

40. புஷ்கராக்ஷ: தாமரை மலருக்கு ஒப்பான கண்களை உடையவர்.

41. மஹா-ஸ்வன: கம்பீரமான நாதத்தையுடையவர். பெருமை பெற்ற குரலுடையவர்.

42. அநாதி நிதனா: முதலும் முடிவும் இல்லாதவர். ஆதியும் அந்தமும் அற்றவர்.

43. தாதா: (ஆதிசேஷ வடிவில்) உலகைத் தாங்குபவர்.

44. விதாதா: எல்லாச் செயல்களையும் அவற்றின் பலன்களையும் விசேஷமாய் உண்டாக்குகிறவர். (உலக நடைமுறை அமைப்பவர்)

45. தாது: உத்தம: பிரம்ம தேவரிலும் சிறந்தவர். உலகைத் தாங்கும் சிறந்த மூலப்பொருள்.

**அப்ரமேயோ ஹ்ருஷீகேச: பத்மநாபோ(அ)மரப்ரபு: ।**
**விச்வகர்மா மநுஸ்த்வஷ்டா ஸ்தவிஷ்ட: ஸ்தவிரோ த்ருவ: । 6 ।**

46. அ-ப்ரமேயோ: பிரமாணங்களுக்கு எட்டாதவர். அளவையால் அறிய முடியாதவர்.

47. ஹ்ருஷீகேச: புலனமைப்பை ஆள்பவர். இந்திரியங்களை ஆள்பவர்

48. பத்மநாப : தாமரையைத் தொப்புளில் கொண்டவர். (உலகத்துக்கெல்லாம் காரணமாகிய) கமலத்தை நாபியில் உடையவர்.

49. அமர ப்ரபு : தேவர்களுக்குத் தலைவர்

50. விச்வ கர்மா : பிரபஞ்சத்தைச் செய்தவர்

51. மனு: மனுவானவர். எல்லாவற்றையும் நினைப்பவர்

52. த்வஷ்டா : (ஸம்ஹார காலத்தில்) எல்லாவற்றையும் அழிப்பவர்.

53. ஸ்தவிஷ்ட : மிகப் பெரும் பொருளாயிருப்பவர் (மிகப் பருத்தவர்)

54. ஸ்தவிரோ த்ருவ : நிலைத்த முதியவர் (பழைமையானவரும் - நிலையானவரும்)

**அக்ராஹ்ய: சாச்வத: க்ருஷ்ணோ லோஹிதாக்ஷ: ப்ரதர்த்தன: ।**
**ப்ரபூதஸ் த்ரிககுப்தாம பவித்ரம் மங்களம் பரம் । 7 ।**

55. அக்ராஹ்ய: இந்திரியங்களால் அறியக் கூடாதவர்

56. சாச்வத: எல்லாக் காலங்களிலும் இருப்பவர்

57. க்ருஷ்ண: கரிய நிறம் படைத்தவர்

58. லோஹிதாக்ஷ: (தாமரைப் போல்) சிவந்த கண்களையுடையவர்

59. ப்ரதர்தந: பிரளய காலத்தில் எல்லாவற்றையும் அழிப்பவர்

60. ப்ரபூத: ஞானம், ஐஸ்வர்யம் முதலிய குணங்கள் நிரம்பியவர்

61. த்ரிக குப்தாம: (மேல், கீழ், நடுவாகிய) மூன்று உலகங்களுக்கும் இருப்பிடம்

62. பவித்ரம்: தூய்மைப்படுத்தும் ரிஷியாகவும், மந்திரமாகவும் தேவதையாகவும் இருப்பவர்.

63. மங்களம் பரம்: சிறந்த (மேலான) மங்கள வடிவினர்.

**ஈசாந: ப்ராணத: ப்ராணோ ஜ்யேஷ்ட: ச்ரேஷ்ட்ட: ப்ரஜாபதி: ।**
**ஹிரண்ய கர்போ பூகர்ப்போ மாதவோ மதுஸூதன:।8।**

64. ஈசாந: எல்லாவற்றையும் அடக்கியாள்பவர்

65. ப்ராணத: உயிர்களை நடத்துகிறவர். உயிரூட்டுபவர்

66. ப்ராண: உயிராயிருப்பவர்

67. ஜ்யேஷ்ட: அனைத்திற்கும் முதன்மையானவர்

68. ச்ரேஷ்ட்ட: மிகச் சிறந்தவர். அனைத்திற்கும் மேலாகியவர்

69. ப்ரஜாபதி: உயிர்த் தொகுதிக்குத் தலைவர்

70. ஹிரண்ய கர்ப்ப: பொன்மயமான ப்ரஹ்மாண்ட்த்தினுள் பிரம்ம ரூபியாக உறைபவர்

71. பூகர்ப்ப: பூமியைக் கருவில் கொண்டவர்

72. மாதவ: லக்ஷ்மியின் கணவர்

73. மதுஸூதன: மதுவெனும் அசுரனை மாய்த்தவர்

**ஈச்வரோ விக்ரமீ தன்வீ மேதாவீ விக்ரம: க்ரம: ।**
**அனுத்தமோ துராதர்ஷ: க்ருதஜ்ஞ: க்ருதி ராத்மவான் ।9।**

74. ஈச்வர: ஸர்வ சக்தியுள்ளவர்

75. விக்ரமீ: எதிரிகளை அழிக்கும் ஆற்றலுடையவர்

76. தன்வீ: வில்லாளி (சார்ங்கம் எனும் வில்லேந்தியவர்)

77. மேதாவீ: அனைத்தையும் அறியும் மதியூகம் வாய்ந்தவர் (மேதை உள்ளவர்)

78. விக்ரம: உலகை அளந்தவர்

79. க்ரம: அனைத்திலும் வியாபித்திருப்பவர்

80. அனுத்தம: தமக்கு மேற்பட்டவர் (மிக்கார்) இல்லாதவர்

81. துராதர்ஷ: எதிரிகளால் பயமுறுத்த முடியாதவர்

82. க்ருதஜ்ஞ: பிராணிகளின் நன்மை, தீமைகளை அறிந்தவர். இலையோ, பூவோ, பழமோ, நீரோ - சிறிதளவு கொடுத்தாலும் மோக்ஷம் அளிப்பவர். திரௌபதிக்கு வஸ்த்ரதானம் செய்தவர்.

83. க்ருதி: நன் முயற்சியாயிருப்பவர்

84. ஆத்மவான்: (தமக்கு வேறு ஆதாரமின்றி) தம் மகிமையே தமக்கு ஆதாரமாகக் கொண்டிருப்பவர். தன் நிலையில் நிலைத்திருப்பவர்

**ஸுரேச: சரணம் சர்ம விச்வரேதா: ப்ரஜாபவ: ।**
**அஹ: ஸம்வத்ஸரோ வ்யால: ப்ரத்யய: ஸர்வ தர்சன: ।1।**

85. ஸுரேச: தேவர்களுக்கு ஈஸ்வரர்

86. சரணம்: துயருற்றவர்களின் துயரைப் போக்குபவர்

87. சர்ம: பரமானந்த வடிவினர்ச

88. விச்வரேதா: உலகத்திற்கு வித்தாகியவர்

89. ப்ரஜாபவ: பிரஜைகளின் உற்பத்திக்குக் காரணமானவர்

90. அஹ: பகல் போல் பிரகாசமாயிருப்பவர்

91. ஸம்வத்ஸரோ: ஸம்வத்ஸரமாகிய காலரூபி

92. வ்யால: மஹாஸர்ப்பம் போல் யாராலும் பிடிக்க முடியாதவர்

93. ப்ரத்யய: அறிவாயிருப்பவர்

94. ஸர்வ தர்சந: எல்லாவற்றையும் கண்களாகக் கொண்டவர்

**அஜ: ஸர்வேச்வர: ஸித்த: ஸித்தி: ஸர்வாதிரச்யுத: ।**
**வ்ருஷாகபிரமேயாத்மா ஸர்வயோகவிநிஸ்ருத: । 11 ।**

95. அஜ: பிறப்பில்லாதவர்

96. ஸர்வேச்வர: அனைவருக்கும் ஈச்வரர்

97. ஸித்த: எப்போதும் எங்கும் உள்ளவர்

98. ஸித்தி: எல்லாவற்றிலும் சிறந்த பயனாயிருப்பவர்

99. ஸர்வாதி: அனைத்திற்கும் ஆதி காரணமாயிருப்பவர்

100. அச்யுத: என்றும் வழுவாதவர்

101. வ்ருஷாகபி: தர்மரூபியாகவும் வராக ரூபியாகவும் இருப்பவர்

102. அமேயாத்மா: அளவிடமுடியாத வடிவினர்

103. ஸர்வயோக விநி: ஸ்ருத: எல்லாத் தொடர்பும் நீங்கியவர்

**வஸுர் வஸுமனா: ஸத்ய: ஸமாத்மா(அ)ஸம்மித: ஸம:।**
**அமோக: புண்டரீகாக்ஷோ வ்ருஷகர்மா வ்ருஷா க்ருதி: । 12 ।**

104. வஸு: எல்லாவற்றிலும் உறைபவர்

105. வஸுமனா: சிறந்த மனமுள்ளவர்

106. ஸத்ய: மெய்யே வடிவாய் கொண்டவர்

107. ஸமாத்மா: எல்லா உயிர்களிடத்தும் ஆத்மாவாய் இருப்பவர்

108. அஸம்மித: அளவிடப்படாதவர்

109. ஸம: எக்காலத்தும் மாறுபாடற்றவர்

110. அமோக: தமது ஸம்பந்தம் வீண் போகாதவர்

111. புண்டரீகாக்ஷ: தாமரை மலர் போன்ற கண்களையுடையவர் (அல்லது) தாமரையை இருப்பிடமாகக் கொண்டவர்

112. வ்ருஷகர்மா: தர்ம நிமித்தமான செய்கையை உடையவர்.

113. வ்ருஷாக்ருதி: அறப் பாதுகாப்பிற்காகத் தோன்றியவர். (''தர்ம ஸம்ஸ்தாப நார்த்தாய ஸம்பவாமி''-கீதை 4-8)

**ருத்ரோ பஹுசிரா பப்ருர்விச்வயோனி: சுசிச்ரவா: ।**
**அம்ருத: சாச்வத ஸ்தாணுர் வராரோஹோ மஹாதபா:**
**। 13 ।**

114. ருத்ர: ருத்திரராயிருப்பவர்

115. பஹூசிரா: எண்ணற்ற தலைகளையுடையவர்

116. பப்ரு: உலகங்களைத் தாங்குபவர்

117. விச்வயோனி: அனைத்திற்கும் பிறப்பிடமாகியவர்

118. சுசிச்ரவா: தூய புகழுள்ளவர். பாவங்களைப் போக்கும் பரிசுத்தமான திவ்ய நாமங்களை உடையவர்

119. அம்ருத: அழிவில்லாதவர்

120. சாச்வத ஸ்தாணு: என்றும் நிலையாயிருப்பவர்

121. வராரோஹ: சிறந்த ஏற்றமுடையவர்

122. மஹாதபா: சிறந்த ஞானமுள்ளவர்

**ஸர்வக: ஸர்வ வித்பானுர் விஷ்வக்ஸேனோ ஜநார்தன: ।**
**வேதோ வேத விதவ்யங்கோ வேதாங்கோ வேதவித்கவி:**
**। 14 ।**

123. ஸர்வக: எங்கும் செல்லுகிறவர்

124. ஸர்வவித் பானு: அனைத்தையும் அறிந்து பிரகாசிப்பவர்

125. விஷ்வக்ஸேனோ: அசுர சேனைகளைப் பல திசைகளில் சிதறடிப்பவர்

126. ஜனார்தன: கெட்ட மனிதர்களை அழிப்பவர்

127. வேத: வேத வடிவானவர்

128. வேத வித்: வேத்தின் பொருளை அறிபவர்

129. அவ்யங்க: புலன்களுக்கு எட்டாதவர்

130. வேதாங்க: வேதத்தை அங்கமாகக் கொண்டவர்

131. வேத வித்: வேதங்களை ஆராய்பவர்

132. கவி: அனைத்தையும் காண்பவர்

**லோகாத்யக்ஷ: ஸுராத்யக்ஷோ தர்மாத்யக்ஷ: க்ருதாக்ருத: ।**
**சதுராத்மா சதுர்வ்யூஹ: சதுர்தம்ஷ்ட்ரச் சதுர்புஜ: ।15।**

133. லோகாத்யக்ஷ: உலங்கங்ளை மேற்பார்வையிடுபவர்

134. ஸூராத்யக்ஷ: தேவர்களைக் கண்காணிப்பவர்

135. தர்மாத்யக்ஷ: தர்மங்களைக் கண்காணிப்பவர்

136. க்ருதாக்ருத: காரியமாகவும் காரணமாகவும் இருப்பவர்

137. சதுராத்மா: நான்கு மூர்த்திகளை உடையவர்

138. சதுர்வ்யூஹ: நான்கு வ்யூங்களை உடையவர்

139. சதுர்தம்ஷ்ட்ரச்: நான்கு தெற்றிப் பற்களை உடையவர்

140. சதுர்புஜ: நான்கு தோள்களை உடையவர்

**ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா ஸஹிஷ்ணுர் ஜகதாதிஜ: ।**
**அனகோ விஜயோ ஜேதா விச்வயோனி: புனர்வஸு: ।16।**

141. ப்ராஜிஷ்ணு: ஒளிவடிவானவர்

142. போஜனம்: போகப் பொருளானவர்

143. போக்தா: அனுபவிப்பவர்

144. ஸஹிஷ்ணு: பொறுமையை இயல்பாகக் கொண்டவர்

145. ஜகதாதிஜ: உலகில் முன் தோன்றியவர்

146. அநக: பாபமற்றவர்

147. விஜய: வெற்றியுடன் திகழ்பவர்

148. ஜேதா: பெருமையால் மேம்பட்டவர்

149. விச்வயோனி: உலகனைத்தையும் உதிக்குமிடமாய்க் கொண்டவர்

150. புனர்வஸு: மீண்டும் மீண்டும் உடலில் வசிப்பவர்

**உபேந்த்ரோ வாமன: ப்ராம்சுரமோக: சுசிரூர்ஜித: ।**
**அதீந்த்ர: ஸங்க்ரஹ: ஸர்கோ த்ருதாத்மா நியமோ யம: ॥ 17 ॥**

151. உபேந்த்ர: இந்திரனுக்குத் தம்பியானவர்

152. வாமன: வாமனாவதாரம் செய்தவர் (குள்ள வடிவினர்)

153. ப்ராம்சு: மூவுலகையும் அளந்தபோது உயர்ந்தவர்

154. அமோக: செயல் வீணாகாதவர்

155. சுசி: தூயவர். சுத்தப்படுத்துகிறவர்

156. ஊர்ஜித: மிக்க வலிமையுடையவர்

157. அதீந்த்ர: இந்திரனுக்கு மேம்பட்டவர்

158. ஸங்க்ரஹ: (ப்ரளயகாலத்தில் அனைத்தையும்) ஸம்ஹரிப்பவர்

159. ஸர்க்க: சிருஷ்டி வடிவினர்

160. த்ருதாத்மா: நிலைத்து நிற்பவர்

161. நியம: கட்டுப்படுத்துபவர்

162. யம: உள்ளிருந்து தூண்டுபவர்

**வேத்யோ வைத்ய: ஸதாயோகீ வீரஹா மாதவோ மது:।**
**அதீந்த்ரியோ மஹாமாயோ மஹோத்ஸாஹோ**
**மஹாபல: । 18 ।**

163. வேத்ய: (மோக்ஷத்தில் நாட்டமுள்ளவர்களால்) அறியக் கூடியவர். உணரப்பட வேண்டியவர்

164. வைத்ய: அறிவாளி. எல்லா வித்தைகளையும் அறிந்தவர்

165. ஸதாயோகீ: எப்போதும் பிரகாசிக்கும் ஸ்வரூபம் உள்ளவர்

166. வீரஹா: அசுர வீரர்களை அழிப்பவர்

167. மாதவ: பிரும்ம வித்யைக்கு நாயகர்

168. மது: தேனைப் போல் இனியவர்

169. அதீந்த்ரிய: புலன்களுக்கு எட்டாதவர். பொறிகளுக்கு அப்பாற்பட்டவர்

170. மஹாமாய: மிக்க மாயையுடையவர்

171. மஹோத்ஸாஹ: பெரும் உற்சாகமுள்ளவர்

172. மஹாபல: மிக்க வலிமையுள்ளவர். பெரும் பலமுள்ளவர்

**மஹாபுத்திர் மஹாவீர்யோ மஹாசக்திர் மஹாத்யுதி: ।**
**அநிர்தேச்யவபு: ஸ்ரீமான் அமேயாத்மா மஹாத்ரித்ருக்**
**। 19 ।**

173. மஹாபுத்தி: மிக்க ஞானமுள்ளவர். பெரும் புத்தியுள்ளவர்

174. மஹாவீர்ய: மிக்க வீர்யமுள்ளவர்

175. மஹாசக்தி: பெரும் சக்தி படைத்தவர். மிக்க ஸாமர்த்தியமுள்ளவர்

176. மஹாத்யுதி: பேரொளி பெற்றவர்

177. அநிர்தேச்யவபு: குறிப்பிட இயலா வடிவினர்

178. ஸ்ரீமான்: மாபெரும் பெருமை பெற்றவர்

179. அமேயாத்மா: அளவிடமுடியாத ஞானமுள்ளவர்

180. மஹாதிரித்ருக்: பெரிய மலையைத் தாங்கியவர்

**மஹேஷ்வாஸோ மஹீபர்த்தா ஸ்ரீநிவாஸ: ஸதாங்கதி: ।**
**அநிருத்த: ஸுரானந்தோ கோவிந்தோ கோவிதாம் பதி:। 20 ।**

181. மஹேஷ்வாஸோ: பெரிய வில்லாளி

182. மஹீபர்த்தா: வராஹாவதாரம் செய்து பூமியைத் தூக்கியவர்

183. ஸ்ரீநிவாஸ: ஸ்ரீதேவி நித்ய வாசம் செய்யும் திருமார்பையுடையவர்

184. ஸதாம் கதி: ஸாதுக்களுக்கு கதியாகியவர் (நல்லோர்கள் அடையுமிடம்)

185. அநிருத்த: எவராலும் தடுக்க முடியாதவர்

186. ஸுரானந்த: தேவர்களை மகிழ்விப்பவர்

187. கோவிந்த: ''கோ'' எனும் பூமியைத் தூக்கியவர் (அல்லது பசுக்களுக்குத் தலைவர். அல்லது ''கோ'' எனும் வாக்கு தன்னை அடையும்படி செய்பவர்)

188. கோவிதாம் பதி: வேத வாக்கை அறிந்தவர்களுக்குத் தலைவர்

**மரீசிர் தமனோ ஹம்ஸ: ஸுபர்ணோ புஜகோத்தம: ।**
**ஹிரண்யநாப: ஸுதபா: பத்மநாப: ப்ரஜாபதி: । 21 ।**

189. மரீசி: ஒளிவடிவானவர்

190. தமந: (யமன் முதலிய வடிவில் நின்று) தண்டிக்கும் தன்மையுள்ளவர்

191. ஹம்ஸ: பரமாத்மா, ''அஹம் ஸா'' என்று தன்மயமாகப் பாவிப்போரின் ஸம்ஸார பயத்தைப் போக்குபவர்

192. ஸுபர்ண: (பேரறிவு பேரின்பமாகிய) அழகிய சிறகுகளை உடையவர்

193. புஜகோத்தம: உத்தமமான ஸர்ப்ப வடிவினர்

194. ஹிரண்ய நாப: பொன்போல் அழகிய நாபியை உடையவர்

195. ஸுதபா: (நர நாராயண வடிவில்) சிறந்த தவம் செய்தவர் (அல்லது சிறந்த ஞானமுள்ளவர்)

196. பத்மநாப: பத்மம் போன்ற நாபியையுடையவர். (ஹிருதய கமலத்தில் பிரகாசிப்பவர்)

197. ப்ரஜாபதி: ப்ரஜைகளுக்குத் தலைவர். நன் மக்களைக் காப்பவர். (நாபிக் கமலத்தில் பிறந்த பிரம்மா முதலிய பிரஜைகளுக்குத் தலைவர்)

**அம்ருத்யு: ஸர்வ த்ருக் ஸிம்ஹ: ஸந்தாதா ஸந்திமான் ஸ்த்திர: ।**
**அஜோ துர்மர்ஷண: சாஸ்தா விச்ருதாத்மா ஸுராரிஹா । 22 ।**

198. அம்ருத்யு: அழிவற்றவர்

199. ஸர்வத்ருக்: எல்லாவற்றையும் காண்பவர்

200. ஸிம்ஹ: பாவிகளை ஹிம்சிப்பவர்

201. ஸந்தாதா: சேர்த்து வைப்பவர்

202. ஸந்திமான்: வினை பொருந்துவதை ஏற்பவர்

203. ஸ்த்திர: என்றும் ஒரே நிலையில் உள்ளவர்

204. அஜ: என்றும் அசைந்து கொண்டிருப்பவர்

205. துர்மர்ஷண: பகைவரால் அடக்குதற்கும், தாங்குதற்கும் முடியாதவர்

206. சாஸ்தா: கட்டளையிட்டு நடத்துகிறவர்

207. விச்ருதாத்மா: (ஸத்தியம் ஞானம் முதலிய

ஸக்ஷணங்களால்) சுருதியில் வெகுவாய்க் கூறப்பட்ட ஸ்வரூபமுடையவர்

208. ஸூராரிஹா: தேவர்களின் எதிரிகளை அழிப்பவர்

**குருர் குருதமோ தாம ஸத்ய: ஸத்யபராக்ரம: ।**
**நிமிஷோ(அ)நிமிஷ: ஸ்ரக்வீ வாசஸ்பதிருதாரதீ: । 23 ।**

209. குரு: எல்லா வித்தைகளையும் உபதேசிப்பவர் ''குருர் குருதம:'' என்பது ஒரே நாமம்

210. குருதம: மிகச் சிறந்த குரு. பரம குருவாய் விளங்குபவர்

211. தாம: ஒளியாய் இருப்பவர் (ஜோதி)

212. ஸத்ய: ஸத்யமே வடிவானவர்

213. ஸத்ய பராக்ரம: வீண் போகாத பராக்ரமுடையவர்

214. நிமிஷ: (யோக நித்ரையில்) கண்களை மூடியிருப்பவர்

215. அநிமிஷ: கண்களை மூடாதவர். (அனைத்தையும் ) கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருப்பவர்

216. ஸ்ரக்வீ: (பஞ்ச தன்மாத்திரை வடிவாகிய வைஜயந்தீ மாலை அணிந்தவர்)

217. வாசஸ்பதி: உதாரதீ: பேரறிவாளரான கல்விப் பாதுகாப்பாளர். வித்தைக்கு அதிபதியான ஸர்வக்ஞர். வேதவாக்கைக் காத்தவர் - வாசஸ்பதி. எல்லோரது அறிவுக்கும் புகலிடமான பேரறிவாளர் - உதாரதீ

**அக்ரணீர் க்ராமணீ: ஸ்ரீமான் ந்யாயோ நேதா ஸமீரண:**
**ஸஹஸ்ரமூர்த்தா விச்வாத்மா ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்**
**। 24 ।**

218. அக்ரணீ: (முமுக்ஷுக்களை) உயர்பதவிக்கு அழைத்துச் செல்பவர்

219. க்ராமணீ: உயிர்த் தொகுதியை வழிப்படுத்துபவர் (அல்லது ஐம்பெரும் பூதங்களை நியமிப்பவர்)

220. ஸ்ரீமான்: சிறந்த காந்தியுள்ளவர்

221. ந்யாய: நியாயமான யுக்தி வடிவினர்

222. நேதா: உலகமென்னும் யந்திரத்தை நடத்துகிறவர்

223. ஸமீரண: வாயுரூபியாக எல்லாவற்றையும் அசையும்படி செய்பவர்

224. ஸஹஸ்ர மூர்த்தா: ஆயிரக்கணக்கான தலைகள் உள்ளவர் (அல்லது) கணக்கற்ற தலைகளையுடையவர். (எல்லோருடைய தலைகளும் பகவானுடைய தலைகளே)

225. விச்வாத்மா: எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பவர். (தாவரம், ஜங்கமம்)

226. ஸஹஸ்ராக்ஷ: ஆயிரக்கணக்கான கண்களுள்ளவர்

227. ஸஹஸ்ரபாத்: ஆயிரக்கணக்கான கால்களுள்ளவர்

(கருத்து: பகவான் உலகையே உடலாகக் கொண்டவர்)

**ஆவர்த்தனோ நிவ்ருத்தாத்மா ஸம்வ்ருத: ஸம்ப்ரமர்தன:।**
**அஹ: ஸம்வர்தகோ வஹ்னி:ரநிலோ தரணீதர: । 25 ।**

228. ஆவர்தன: (ஸம்ஸார சக்ரத்தைச்) சுழற்றும் இயல்பினர்

229. நிவ்ருத்தாத்மா: ஸம்ஸாரப் பற்றில்லாத ஸ்வரூபமுடையவர்

230. ஸம்வ்ருத: அவித்தையால் மறைக்கப்பட்டவர்

231. ஸம்ப்ரமர்த்தன: (ருத்ரன், யமன் முதலிய வடிவங்களில் உலகை) ஸம்ஹரிப்பவர்

232. அஹஸ் ஸம்வர்தக: பகலை உண்டாக்கும் சூரிய வடிவினர்

233. வந்ஹி: (யாகங்களில் அளிக்கப்படும் ஹவிஸ்ஸை தேவர்களுக்குக் கொண்டு சேர்க்கும்) அக்னி வடிவினர்.

234. அநில: காற்று வடிவினர்

235. தரணீதர: (ஆதிசேஷனாகவும், வராஹமூர்த்தியாகவும்) பூமியைத் தாங்குகிறவர்

**ஸுப்ரஸாத: ப்ரஸந்நாத்மா விச்வத்ருக் விச்வபுக் விபு: ।**
**ஸத்கர்தா ஸத்க்ருத: ஸாதுர்ஜஹ்னுர் நாராயணோ நர:।26।**

236. ஸுப்ரஸாத: அருள் மிகுந்தவர். நல்லருள் புரிபவர்

237. ப்ரஸந்நாத்மா: தெளிந்த (கலங்காத) மனமுள்ளவர்

238. விச்வத்ருக்: உலகை ஆளும் பிரபு. உலகைத் தாங்குகிறவர்

239. விச்வ: புக்: உலகை ஸம்ஹார காலத்தில் புசிப்பவர். உலகைக் காப்பவரும் அவரே.

240. விபு: பலவாறான வடிவு கொண்டவர்

241. ஸத்கர்த்தா: நல்லோரைப் போற்றிப் பூஜிப்பவர்

242. ஸத்க்ருத: நல்லோரால் பூஜிக்கப்படுபவர்

243. ஸாது: நியாயமான வழியில் நடப்பவர். நேர்மையுள்ளவர்.

244. ஜந்ஹீ: ஸம்ஹார காலத்தில் எல்லாவற்றையும் மறைப்பவர்

245. நாராயண: உண்டானவற்றிற்கெல்லாம் உறைவிடமாகியவர்.

246. நர: வழி நடத்துபவர் (நாராயணர் - கண்ணன். நரர் - அர்ஜுனன்)

**அஸங்க்யேயோ (அ)ப்ரமேயாத்மா விசிஷ்ட:**
**சிஷ்டக்ருச் சுசி: ।**
**ஸித்தார்த: ஸித்தஸங்கல்ப: ஸித்தித: ஸித்தி ஸாதன: । 27।**

247. அஸங்க்யேய: கணக்கிலடங்காதவர்

248. அப்ரமேயாத்மா: அறிவுக்கு எட்டாதவர்

249. விசிஷ்ட: அனைத்திற்கும் மேலானவர்

250. சிஷ்டக்ருத: கட்டளை இடுபவர். (நல்லோரைக் காப்பவர்)

251. சுசி: தூயவர்

252. ஸித்தார்த்த: வேண்டியதெல்லாம் தமக்குத் தாமே அமைந்திருப்பவர்

253. ஸித்த ஸங்கல்ப: எண்ணம் கூடியவர்

254. ஸித்தித: காரிய ஸித்தியை அளிப்பவர்

255. ஸித்திஸாதன: செயல் நிறைவை முடித்துத் தருபவர்

**வ்ருஷாஹீ வ்ருஷபோ விஷ்ணு: வ்ருஷபர்வா வ்ருஷோதர:।**
**வர்தனோ வர்தமானஸ்ச விவிக்த: ச்ருதிஸாகர: । 28 ।**

256. வ்ருஷாஹீ: பகல்போல் பிரகாசிக்கும் தர்மத்தையுடையவர்

257. வ்ருஷப: பக்தர்கள் விரும்பியதைப் பொழிபவர்

258. விஷ்ணு: (வாமனாவதாரத்தில்) உலகங்களை அளந்தவர். ‘‘ஓங்கி உலகளந்த உத்தமன்’’ - திருப்பாவை

259. வ்ருஷபர்வா: தருமரூபமான படிகளால் அடையக் கூடியவர்.

260. வ்ருஷோதர: உயிர்களைப் பிரளயகாலத்தில் தன் வயிற்றுக்குள் அடக்கி வைப்பவர்

261. வர்த்தன: போஷித்து வளர்ப்பவர்

262. வர்த்தமான: பிரபஞ்ச ரூபமாகத் தானே வளர்பவர்

263. விவிக்த: (ப்ரபஞ்ச ரூபமாயிருந்தும்) ஒன்றிலும் சேராமல் தனித்து நிற்பவர்

264. ச்ருதி ஸாகர: சுருதிகளாகிய நதிகள் நாடியடையும் கடல் போன்றவர்.

**ஸுபுஜோ துர்தரோ வாக்மீ மஹேந்த்ரோ வஸுதோ வஸு:।**
**நைகரூபோ ப்ருஹத்ரூப: சிபிவிஷ்ட: ப்ரகாசன: । 29 ।**

265. ஸுபுஜ: சிறந்த புஜங்களை உடையவர்

266. துர்த்தர: எல்லாவற்றையும் தாங்குபவராய், தான் வேறொருவரால் தாங்கப்படாமலிருப்பவர்

267. வாக்மீ: வேதரூபமான சிறந்த வாக்கையுடையவர். சிறந்த பேச்சு வன்மை உடையவர்

268. மஹேந்த்ர: ஈஸ்வரருக்கும் ஈஸ்வரர்

269. வஸுத: (செல்வமாயிருப்பவர்) செல்வமளிப்பவர்

270. வஸு: செல்வமாயிருப்பவர் (செல்வம்)

271. நைகரூப: வடிவம் ஒன்றில்லாதவர்

272. ப்ருஹத் ரூப: பெரு வடிவமுள்ளவர்

273. சிபிவிஷ்ட: ஒளிக்கரணங்களில் ஊடுருவி நிற்பவர்.

274. ப்ரகாசந: எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்பவர்.

**ஓஜஸ்தேஜோ த்யுதிதர: ப்ரகாசாத்மா ப்ரதாபன: ।**
**ருத்த: ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ர: சந்த்ராம்சுர்**
**பாஸ்கரத்யுதி: । 30 ।**

275. ஓஜஸ் தேஜோ த்யுதிதர: வலிவு, திறமை, ஒளி உடையவர்

276. ப்ரகாசாத்மா: எங்கும் பிரகாசிக்கும் இயல்புடையவர்

277. ப்ரதாபநர்: சுடுபவர். (சூரியன் முதலிய விபூதிகளால்) உஷ்ணத்தை உண்டுபண்ணுகிறவர்

278. ருத்த: தர்மம், ஞானம், வைராக்யம் முதலிய குணங்களால் நிறைந்தவர்

279. ஸ்பஷ்டாக்ஷர: உதாத்த ஸ்வரமுள்ள ஓம் என்னும் எழுத்தினால் குறிப்பிடப்படுபவர். (ஓம், தத், ஸத் என்று பிரம்மத்திற்கு மூன்று வகையான குறிப்பு பெயர் கூறப்பட்டுள்ளது)

280. மந்த்ர: மந்திர வடிவினர்

281. சந்த்ராம்சு: சந்திர கிரணம் போல் மகிழ்ச்சி அளிப்பவர்.

282. பாஸ்கர த்யுதி: ஸூர்ய ஒளி கொண்டவர். (''வானத்தில் ஆயிரம் சூரியர்களின் பிரகாசம் ஒருங்கு கூடி உதிக்குமேயானால் அது அந்த மகா புருஷருடைய பிரகாசத்திற்குச் சமமாக இருக்கும்''- கீதை 11.12.)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம் (6) உத்யத்பானு - ஸஹஸ்ராபா: ''ஆயிரம் சூரியர்கள் உதித்தாற் போன்ற பிரகாசம் பொருந்தியவள்''. விஷ்ணு = சக்தி= சிவன் - அபேதம்

**அம்ருதாம் சூத்பவோ பானு: சசபிந்து: ஸுரேச்வர: ।**
**ஔஷதம் ஜகத: ஸேது: ஸத்ய தர்ம பராக்ரம: ।31 ।**

283. அம்ருதாம்சூத்பவ: (பாற்கடலிலிருந்து) சந்திரனைத் தோன்றச் செய்தவர்

284. பானு: தாமே பிரகாசிப்பவர்

285. சசபிந்து: (உயிர்களைப் போஷிப்பதில்) சந்திரன் போன்றவர்

286. ஸூரேச்வர: தேவர்களுக்குத் தலைவர்

287. ஔஷதம்: மருந்து (பிறவிப்பிணிக்கு மருந்தாகியவர்)

288. ஜகதஸ்ஸேது: உலகைக் கரையேற்றுபவர்

289. ஸத்ய தர்ம பராக்ரம: பொய்க்காத ஞானம் முதலிய குணங்களும் வீரச் செயல்களும் உடையவர்

**பூதபவ்ய பவந்நாத: பவன: பாவனோ(அ)நல: ।**
**காமஹா காமக்ருத் காந்த: காம: காமப்ரத: ப்ரபு: ।32 ।**

290. பூதபவ்ய பவந்நாத: சென்றது, வருவது, நிகழ்வது, ஆகிய அனைத்திற்கும் ஈஸ்வரர்

291. பவந: (காற்று வடிவிலிருந்து) பரிசுத்தப்படுத்துகிறவர்

292. பாவந: காற்றையும் வீசும்படி செய்கிறவர்

293. அநல: போதுமென்பதில்லாதவர். பிராண சக்தியை ஏற்பவர்

294. காமஹா: பக்தர்களுக்கு ஸம்ஸாரப் பற்றைப் போக்குகிறவர்

295. காமக்ருத்: ஆசையை நிறைவேற்றுபவர்

296. காந்த: அழகினால் கவர்ச்சி மிக்கவர்

297. காம: எல்லோராலும் விரும்பப்படுபவர்

298. காம ப்ரத: வேண்டுவோக்கு வேண்டியவற்றை அளிப்பவர்

299. ப்ரபு: உயர்ந்து விளங்குபவர். வல்லவர்

**யுகாதி க்ருத் யுகாவர்தோ நைகமாயோ மஹாசன: ।**
**அத்ருச்யோ வ்யக்தரூபச்ச ஸஹஸ்ரஜிதனந்தஜித் ।33।**

300. யுகாதிக்ருத்: யுகம் முதலிய கால வேறுபாடுகளை உண்டாக்கியவர்

301. யுகாவர்த: யுகங்களைத் திரும்ப, திரும்ப வரச் செய்பவர்

302. நைகமாய: பல மாயைகள் உள்ளவர்

303. மஹாசன: பெருந்தீனி கொள்பவர்

304. அத்ருச்ய: புலப்படாதவர்

305. வ்யத்க ரூப: யோகிகளுக்கு புலப்படும் உருவமுள்ளவர்

306. ஸஹஸ்ரஜித்: ஆயிரக்கணக்கான அசுரர்களை ஜயிப்பவர்

307. அனந்தஜித்: (சிந்தனைக்கு எட்டாத தமது சக்தியால்) எல்லாவிடத்திலும் எல்லா உயிர்களையும் (போர், விளையாட்டு முதலியவற்றில்) வெல்பவர்.

**இஷ்டோவிசிஷ்ட: சிஷ்டேஷ்ட: சிகண்டீ நஹுஷோ**
**வ்ருஷ: ।**
**க்ரோதஹா க்ரோதக்ருத் கர்த்தா விச்வபாஹுர்மஹீதர:**
**।34।**

308. இஷ்ட: (ஆனந்த ரூபியாயிருப்பதால்) எல்லோருக்கும் இஷ்டமானவர்

309. அவிசிஷ்ட: (அந்தர்யாமியாயிருப்பதாலும் தம் உயர்வினாலும்) மிக்காரில்லாதவர்

310. சிஷ்டேஷ்ட: ஞானிகளுக்குப் பிரியமானவர். அவர்களால் பூஜிக்கப்படுபவர்

311. சிகண்டீ: மயில்தோகையை அணிந்தவர்

312. நஹுஷ: மாயையால் உயிர்களைக் கட்டுகிறவர்

313. வ்ருஷ: (அடியார் விரும்பியவற்றை ) பொழிபவர்

314. க்ரோதஹா: சாதுக்களின் கோபத்தை ஒழிப்பவர்

315. க்ரோதக்ருத் கர்தா: கோபங்கொள்ளும் தைத்தியரை வெட்டி எறிபவர்

316. விச்வ பாஹு: உலகிற்கு கை கொடுப்பவர்

317. மஹீதர: பூமியைத் தாங்குகிறவர்

**அச்யுத: ப்ரதித: ப்ராண: ப்ராணதோ வாஸவானுஜ: ।**
**அபாம்நிதி ரதிஷ்டான அப்ரமத்த: ப்ரதிஷ்டித: । 35 ।**

318. அச்யுத: நிலை மாறாதவர்

319. ப்ரதித: கீர்த்தி பெற்றவர்

320. ப்ராண: வாயுரூபியான ஸூத்ராத்மாவாக இருப்பவர்

321. ப்ராணத: பலத்தைக் கொடுப்பவர்

322. வாஸவானுஜ: (காசியபருக்கு அதிதியிடம்) இந்திரனது தம்பியாப் பிறந்தவர்

323. அபாம்நிதி: கடலாயிருப்பவர்

324. அதிஷ்ட்டானம்: ஆதாரமாயிருப்பவர் - உலகிற்கு இருப்பிடம்

325. அப்ரமத்தா: (கரும பலனையளிப்பதில்) கவனக் குறைவில்லாதவர்

326. ப்ரதிஷ்ட்டித: (தமக்கு வேறு ஆதாரம் வேண்டாதபடி தம் மகிமையிலேயே) நிலைபெற்றிருப்பவர்.

**ஸ்கந்த: ஸ்கந்ததரோ துர்யோ வரதோ வாயுவாஹன: ।**
**வாஸுதேவோ ப்ருஹத்பானு ராதிதேவ: புரந்தர: । 36 ।**

327. அமுதமாகப் பெருகுகிறவர். ஸ்கந்த: நெகிழ்பவர்

328. ஸ்கந்ததர: அறநெறியைப் பாதுகாப்பவர்

329. துர்ய: பொறுப்பை ஏற்பவர். உலகின் பாரத்தைத் தாங்குபவர்

330. வரத: வரங்களை அளிப்பவர்

331. வாயுவாஹன: காற்றையும் இயக்குவிப்பவர்

332. வாஸுதேவா: அனைத்திலும் உறைந்து விளையாடுபவர்

333. ப்ருஹத்பானு: விஸ்தாரமாக எங்கும் பரவிநிற்கும் கிரணங்களை உடையவர்

334. ஆதிதேவ: முதற் காரணமான தேவர். உலகிற்கு முதற் காரணமாய் பிரகாசிப்பவர்

335. புரந்தர: அசுரர்களின் புரங்களை பிளந்தவர்

**அசோகஸ் தாரணஸ்தார: சூர: சௌரிர் ஜனேச்வர: ।**
**அனுகூல: சதாவர்த்த: பத்மீ பத்மநிபேக்ஷண: । 37 ।**

336. அசோக: சோகமற்றவர் (பசி, தாகம், விசனம், மயக்கம், மூப்பு, மரணம் - ஆறு குறைகளும் இல்லாதவர்)

337. தாரண: பிறவிக் கடலைத் தாண்டுவதற்கு உதவுபவர்

338. தார: ஸம்ஸாரக் கடலிலுள்ள கொடிய பயங்களிலிலிருந்து கறையேற்றுபவர்)

339. சூர: பராக்கிரமுடையவர்

340. சௌரி: சூரர் எனப் பெயர் பெற்ற வசுதேவருடைய புத்திரர்

341. ஜனேச்வர: மக்கள் தலைவர். ஜனித்தவர்க்கெல்லாம் ஈஸ்வரர்

342. அனுகூல: அன்புடன் கரையேற்றுபவர். அனைவருக்கும் (ஆத்மாவாயிருப்பதால்) அனுகூலமாயிருப்பவர்

343. சதாவர்த்தா: (தர்மத்தை ரக்ஷிப்பதற்காக) அநேக அவதாரங்களைச் செய்தவர்

344. பத்மீ: தாமரையைக் கையில் தரித்திருப்பவர்

345. பத்ம நிபேக்ஷண: தாமரைப் போன்ற இரு கண்களை உடையவர்

**பத்மநாபோ (அ)ரவிந்தாக்ஷ: பத்மகர்ப்ப: சரீரப்ருத் ।**
**மஹர்த்திர் ருத்தோ வ்ருத்தாத்மா மஹாக்ஷோ கருடத்வஜ: ।38।**

346. பத்மநாப: பதினான்கு உலகங்களாகிய பத்மத்தை தனது நாபியில் உடையவர்

347. அரவிந்தாக்ஷ: தாமரைப் போன்ற கண்களுள்ளவர்

348. பத்ம கர்ப்ப: இதயத் தாமரையினுள் உறைபவர். தன்னை உபாசிப்பவரின் மனதைத் தாமரையாக்கி, ஆஸனமாக ஏற்று உள்ளே உறைபவர். (அபிராமி அந்தாதி-90: ''வருந்தாவகை என் மனத் தாமரையினில் வந்து புகுந்திருந்தாள் பழைய இருப்பிடமாக..''

349. சரீர ப்ருத்: உடலை வளர்ப்பவர்

350. மஹர்த்தி: பெருஞ் செல்வமுடையவர்

351. ருத்த: பிரபஞ்ச ரூபமாக விருத்தியடைகிறவர்

352. விருத்தாத்மா: முதியவர்

353. மஹாக்ஷ: பெரிய கண்களையுடையவர்

354. கருடத் த்வஜ: கருடக் கொடியுள்ளவர்

**அதுல: சரபோ பீம: ஸமயஜ்ஞோ ஹவிர்ஹரி: ।**
**ஸர்வலக்ஷண லக்ஷண்யோ லக்ஷ்மீவாந் ஸமிதி ஞ் ஜய:**
**। 39 ।**

355. அதுல: ஒப்பற்றவர். உவமையில்லாதவர்

356. சரப: சரீரங்களில் ஆத்மாவாய் உறைபவர்

357. பீம: பயப்படச் செய்பவர்

358. ஸமயஜ்ஞ: நேரமறிந்தவர்

359. ஹவிர்ஹரி: அவிர்பாகத்தை ஏற்பவர்

360. ஸர்வ லக்ஷண லக்ஷண்ய: எல்லா பிரமாணங்களாலும் அறியப்படுகிறவர்

361. லக்ஷ்மீவான்: லக்ஷ்மீ எப்போதும் தன்னை விட்டு விலகாதிருப்பவர்

362. ஸமிதிஞ்ஜய: யுத்தங்களில் ஜயிப்பவர்

**விக்ஷரோ ரோஹிதோ மார்கோ ஹேதுர் தாமோதர: ஸஹ:।**
**மஹீதரோ மஹாபாகோ வேகவா நமிதாசந: । 40 ।**

363. விக்ஷர: அழிவற்றவர்

364. ரோஹித: ரோஹிதமெனும் சிவப்பு மீனாக அவதரித்தவர்

365. மார்க: மோக்ஷத்தில் நாட்டமுடையவர்களால் தேடப்படுகிறவர்

366. ஹேது: உபாதான காரணமாகவும், நிமித்த காரணமாகவும் இருப்பவர்

367. தாமோதர: வயிற்றில் கயிறு உள்ளவர். கயிற்றால் யசோதையால் வயிற்றில் கட்டப்பட்டவர். தாம எனும் உலகங்களை தமது வயிற்றில் வைத்திருப்பதால் தாமோதரன் எனலுமாம்.

368. ஸஹ: எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்பவர் (அல்லது வெல்லுகிறவர்)

369. மஹீதர: பூமியைத் தாங்குகிறவர்

370. மஹாபாக: பெரும் பாக்கியம் பொருந்திய - அவதாரங்களால் சிறந்தவர்

371. வேகவான்: மிகுந்த வேகம் உள்ளவர்

372. அமிதாசன: அளவிலாது உண்பவர். ஸம்ஹார காலத்தில் உலகையே உண்பவர். இடையர்கள் இந்திரனுக்காக செய்த அளவற்ற அன்னக் குவியலைத் தாம் உண்டவர்.

**உத்பவ: க்ஷோபணோ தேவ: ஸ்ரீகர்ப்ப: பரமேச்வர: ।**
**கரணம் காரணம் கர்தா விகர்தா கஹனோ குஹ: । 41 ।**

373. உத்பவ: உலகின் உற்பத்திக்குக் காரணமானவர்.

374. க்ஷோபன: சிருஷ்டிகாலத்தில் பிருகிருதியையும் புருஷனையும் உட்புகுந்து கலக்குபவர்

375. தேவ: தேவர், படைப்பு முதலியவற்றில் விளையாடுபவர். எங்கும் செல்பவர். தேவர்களின் எதிரிகளை வெல்பவர்.

376. ஸ்ரீகர்ப்ப: தமது செல்வமாகிய உலகனைத்தையும் வயிற்றுக்குள் வைத்திருப்பவர்

377. பரமேச்வர: மிகப் பெரிய ஈச்வரர் - மிகவும் சிறந்த ஆட்சித் திறனை உடையவர்

378. கரணம்: சிறந்த ஸாதனம். உலகின் உற்பத்திக்குக் கருவியாய் இருப்பவர்

379. காரணம்: உபாதான காரணமும் நிமித்த காரணமும்மாயிருப்பவர்

380. கர்தா: செயலாற்றுபவர். படைப்பவர். ஸ்வதந்திரர்.

381. விகர்தா: விசித்திரமான உலகங்களைப் படைத்தவர்

382. கஹந: தம் ஸ்வரூபமும் சக்தியும் செய்கையும் அறியக் கூடாமலிருப்பவர்.

383. குஹ: மாயையினால் எல்லாவற்றையும் மறைப்பவர்

**வ்யவஸாயோ வ்யவஸ்த்தான: ஸம்ஸ்தான: ஸ்த்தானதோ த்ருவ: ।**
**பரர்தி: பரமஸ்பஷ்ட: துஷ்ட: புஷ்ட: சுபேக்ஷண: ।42।**

384. வ்யவஸாய: உள்ளறிவானவர். ஞான ஸ்வரூபி

385. வ்யவஸ்த்தான: எல்லா வரையறைகளுக்கும் ஆதாரமானவர்

386. ஸம்ஸ்த்தான: எல்லாம் தம்மிடத்தில் பிரளயமாகும்படி இருப்பவர்

387. ஸ்த்தானத: பதவிகளை அளிப்பவர்

388. த்ருவ: நிலையானவர்

389. பரர்த்தி: சிறந்த விபூதி உள்ளவர். சிறந்த ஐஸ்வர்யமுடையவர்

390. பரமஸ்பஷ்ட: நன்கு புலப்படுவர். அழகின் எல்லை நிலமாகவும் ஸ்வயம்பிரகாசராகவும் இருப்பவர்

391. துஷ்ட: பேரானந்த வடிவாயிருப்பவர்

392. புஷ்ட: எப்போதும் பூர்ணமானவர்

393. சுபேஷண: மங்களமான கடாக்ஷமுடையவர்

(அயோத்தி மக்கள் எண்ணம்: ‘‘வாழ்வில் பெற வேண்டிய சிறந்த லாபம் - ஸ்ரீ ராம தர்சனம்)

**ராமோ விராமோ விரதோ மார்க்கோ நேயோ**

**நயோ(அ)நய: ।**

**வீர: சக்திமதாம் ச்ரேஷ்டோ தர்மோ தர்ம விதுத்தம: ।43।**

394. ராம: இன்புறச் செய்பவர். யாவரும் தம்மிடம் மகிழும்படி இருப்பவர்

395. விராம: ஓய்வுறும் இடம். எல்லாப் பிராணிகளுக்கும் முடியும் இடமாயிருப்பவர்

396. விரத: பற்றற்றவர். உலக இன்பங்களில் ஆசையில்லாதவர்

397. மார்க்க: நல்வழி முக்திக்கு வழியாயிருப்பவர்

398. நேய: தத்துவ ஞானத்தினால் ஜீவனைப் பரமாத்வாகும்படி அழைத்துக் கொள்பவர்.

399. நய: எல்லாவற்றையும் நடத்துகிறவர்

400. அநய: தாம் யாராலும் நடத்தப்படாதவர்

401. வீர: வீரர். பராக்கிரமமுள்ளவர்

402. சக்திமதாம் ச்ரேஷ்ட்ட: சக்திவாய்ந்த பிரம்மாதி தேவர்களுக்கும் மிகுந்த சக்தியுள்ளவர்

403. தர்ம: தர்மம். எல்லாத் தருமங்களாலும் ஆராதிக்கப்படுகிறவர்.

404. தர்ம விதுத்தமா: தர்மந் தெரிந்தவர்களில் மிகச் சிறந்தவர்

(நதிகள் கடலில் சேர்வது போல ஸாதுக்கள் எப்போதும் வந்தடையும்படி இருப்பவர் - ஸ்ரீ ராமாயணம்)

**வைகுண்ட: புருஷ: ப்ராண: ப்ராணத: ப்ரணவ: ப்ருது: ।**

**ஹிரண்யகர்ப்ப: சத்ருக்னோ வ்யாப்தோ**

**வாயுரதோக்ஷஜ: । 44 ।**

405. வைகுண்ட்ட: தடுத்தாட் கொள்பவர். பக்தர்கள் தம்மை அடைவதற்கு இடையூறுகளை விலக்கி அவர்களை தம்மிடம் சேர்த்துக் கொள்பவர்

406. புருஷ: பாபத்தைச் சுட்டெரித்தவர்

407. ப்ராண: உயிராக இருப்பவர்

408. ப்ராணத: உயிரைத் தருபவர்

409. ப்ரணவ: ஓங்காரம் (ஓம் என்று ஒலிப்பவர்)

410. ப்ருது: பிரபஞ்ச ரூபமாய் விரிந்துள்ளவர்.

411. ஹிரண்ய கர்ப்ப: பிரம்மாவின் உற்பத்திக்குக் காரணமாகிய பொன் அண்டத்தை தம்முள் வைத்திருப்பவர்

412. சத்ருக்ன: எதிர்ப்பை அழிப்பவர். தேவ சத்ருக்களாகிய அசுரர்களை கொல்லுகிறவர்.

413. வ்யாப்த: காரண வடிவாய்க் காரியங்களில் ஊடுவி நிற்பவர்.

414. வாயு: மணங்கமழச் செய்கிறவர்

415. அதோக்ஷ ஜ: யாரும் எவ்வளவு அனுபவித்து உபயோகித்துக் கொண்டாலும் வற்றிக் குறைவு படாதவர்.

**ருது: ஸுதர்சன: கால: பரமேஷ்டீ பரிக்ரஹ: ।**
**உக்ர: ஸம்வத்ஸரோ தக்ஷோ விச்ராமோ விச்வதக்ஷிண:**
**। 45 ।**

416. ருது: ருது என்னும் காலவடிவினர்

417. ஸுதர்சன: மங்களமான மோக்ஷமென்னும் ஞான வடிவினர். - மங்கள நோக்குள்ளவர்

418. கால: எல்லாவற்றையும் எண்ணுகிறவர்

419. பரமேஷ்ட்டீ: உயர்ந்த இடத்தில் இருப்பவர்

420. பரிக்ரஹ: எங்கும் காணப்பெறுபவர். சரணாகதர்களால் எல்லா வகைகளாலும் கொள்ளப்படுகிறவர்

421. உக்ர: கண்டிப்பாகக் கட்டளையிடுபவர். பயமுறுத்துகின்றவர்.

422. ஸம்வத்ஸர: எல்லாப் பொருள்களும் தம்மிடத்தில் வசிக்கும்படி இருப்பவர்.

423. தக்ஷ: சுறுசுறுப்புடன் இயங்குபவர். எல்லாக் காரியங்களையும் விரைவாகச் செய்து முடிப்பவர்

424. விச்ராம: ஓய்வளிப்பவர். ஸம்ஸார ஸாகரத்தில் களைத்துப் போனவர்களுக்கு இளைப்பாறுமிடமாகியவர் (அல்லது மோக்ஷம் என்னும் இளைப்பாறுதலைக் கொடுப்பவர்)

425. விச்வதக்ஷிண: எல்லாம் வல்லவர். எல்லாச் செயல்களிலும் திறமையுடையவர்.

**விஸ்தார: ஸ்த்தாவர ஸ்தாணு: ப்ரமாணம் பீஜ மவ்யயம்।**
**அர்தோ(அ)னர்த்தோ மஹாகோசோ மஹாபோகோ**
**மஹாதன: । 46 ।**

426. விஸ்தார: விரிவடையுமிடம். தம்மிடம் உலகனைத்தும் விஸ்தரிக்கும்படி இருப்பவர்

427. ஸ்தாவரஸ்தாணு: தாம் நிலைபெற்றவராகவும், பூமி முதலியவை தம்மிடம் நிலையுள்ளவராகவும் இருப்பவர்.

428. ப்ரமாணம்: உள்ளறிவானவர். ஞானரூபியாயிருப்பவர்.

429. பீஜம் அவ்யயம்: என்றும் அழிவில்லாத காரணமாயிருப்பவர்

430. அர்த்த: (இன்பவடிவினராதலால்) எல்லோராலும் விரும்பப்படுகிறவர்

431. அநர்த்த: வேண்டுவதில்லாதவர்

432. மஹாகோச: ஐந்து பெரிய கோசங்களுள் உறைபவர்.

433. மஹாபோக: சிறந்த இன்ப வடிவினர்

434. மஹாதன: பெருஞ்செல்வமுள்ளவர்

**அநிர்விண்ண: ஸ்த்தவிஷ்டோ(அ) பூர் தர்மயூபோ மஹாமக: ।**
**நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ க்ஷம: க்ஷாம: ஸமீஹன: । 47 ।**

435. அநிர்விண்ண: அலுப்பற்றவர். வெறுப்பில்லாதவர்

436. ஸ்த்த விஷ்ட்ட: மிகப் பெரு வடிவினர். விராட் ரூபியாக மிக விரிவாயிருப்பவர்

437. அபூ: தோன்றாதவர். பிறப்பிலாதவர்

438. தர்மயூப: தர்மமாகிய முளையாயிருப்பவர்

439. மஹாமக: பெரும் வேள்விகள்ளுவர் (எவருக்கு அர்ப்பணம் செய்யப்பட்டால் யாகங்கள் பெருமையடைகின்றனவோ அவர்)

440. நக்ஷத்ரநேமி: நக்ஷத்திர சக்கிரத்தினிடையே அச்சாக விளங்குபவர்

441. நக்ஷத்ரீ: சந்திரனாக இருப்பவர்

442. க்ஷம: திறமையுள்ளவர்

443. க்ஷாம: பிரளயகாலத்தில் கார்யங்ககளனைத்தும் அழிந்தபோது, காரணரூபியாகிய தாம்மட்டும் தனித்திருப்பவர்

444. ஸமீஹன: சிருஷ்டி முதலிய காரியங்களை விரும்புகிறவர்.

**யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யச க்ரது: ஸத்ரம் ஸதாங்கதி:।**
**ஸர்வதர்சீ விமுக்தாத்மா ஸர்வஜ்ஞோ ஜ்ஞானமுத்தமம் ।48।**

445. யஜ்ஞ: யக்ஞ ஸ்வரூபி. வேள்வி வடிவானவர்

446. இஜ்ய: வேள்விகளால் வழிபடத்தக்கவர்

447. மஹேஜ்ய: வழிபடத்தக்கவர்களில் பெரியவர்

448. க்ரது: யூபஸ்தம்பம் நாட்டியம் செய்யும் யாகவடிவினர். குறிப்பிட்ட பலனைப் பெற செய்யும் வேள்வி ''க்ரது''. இதில் ''யூபம்'' எனும் பசுவைக் கட்டும் தரி உண்டு

449. ஸத்ரம்: ஸத்ரயாக வடிவினர். லோக க்ஷேமத்திற்காக (சுயநலமின்றி) பலர் கூட்டுறவில் செய்வது ஸத்ரயாகம்

450. ஸதாம் கதி: மோக்ஷத்தை நாடுவோர்க்கு (பற்றற்றவர்) அடைக்கலமாகியவர்

451. ஸர்வதர்சீ: (பிராணிகளின் நல்வினை தீவினைகளாகிய) அனைத்தையும் இயற்கையாக அறிபவர்.

452. விமுக்தாத்மா: இயற்கையாகவே எல்லாப் பற்றுகளும் விட்ட ஆத்மாவாயிருப்பவர்

453. ஸர்வக்ஜ்ஞ: எல்லாமாகவும், அறிபவராகவும் இருப்பவர்

454. ஜ்ஞானம் உத்தமம்: சிறந்த அறிவு. உத்தம ஞான வடிவினர்

**ஸுவ்ரத: ஸுமுக: ஸூக்ஷ்ம: ஸுகோஷ: ஸுகத: ஸுஹ்ருத்।**
**மநோஹரோ ஜிதக்ரோதோ வீர பாஹுர் விதாரண: ।49 ।**

455. ஸுவ்ரத: நாடியவர்களை ரக்ஷிக்கும் சிறந்த விரதத்தை உடையவர்

456. ஸுமுக: அழகிய முகமுள்ளவர்

457. ஸூக்ஷ்ம: ஆதியான ஸூக்ஷ்ம காரணமாக இருப்பவர்

458. ஸுகோஷ: வேதமான நல்ல (மங்களமான) கோஷத்தை செய்தவர்

459. ஸுகத: இன்பம் தருபவர்

460. ஸுஹ்ருத்: நல்லிதயம் கொண்டவர்

461. மனோஹர: மனத்தை ஈர்ப்பவர்

462. ஜிதக்ரோத: மனக்கொதிப்பை வென்றவர்

463. வீரபாஹு: நன்கு செயல்படுகிற கைகள் உள்ளவர்

464. விதாரண: பிளப்பவர்

**ஸ்வாபன: ஸ்வவசோ வ்யாபீ நைகாத்மா**

**நைககர்மக்ருத்ந ।**

**வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ ரத்ன கர்ப்போ தனேச்வர:**

**।50।**

465. ஸ்வாபன: தூங்கச் செய்பவர்

466. ஸ்வவச: பிறருக்கு வசப்படாதவர்

467. வ்யாபீ: வியாதிருப்பவர்

468. நைகாத்மா: பல உருவங்களில் இருப்பவர்

469. நைக கர்ம க்ருத்: பல பணிகள் (சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம்) புரிபவர்

470. வத்ஸர: அனைத்திற்கும் தாமே இருப்பிடமானவர்

471. வத்ஸல: அன்புள்ளவர்

472. வத்ஸீ: கன்றுகளைக் காப்பவர்

473. ரத்ந கர்ப்ப: ரத்தினங்களை உள்ள கடலாயிருப்பவர் (அடியார்களைத் தன் வயிற்றில் வைத்து காப்பவர்)

474. தனேச்வர: செல்வநாயகர். குபேரனாயிருப்பவர்

**தர்மகுப் தர்மக்ருத் தர்மீ ஸத்தஸத் க்ஷர மக்ஷரம் ।**

**அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சுர் விதாதா க்ருதலக்ஷண: । 51।**

475. தர்மகுப்: தர்மத்தை காப்பவர்

476. தர்மக்ருத்: அறவழி நடப்பவர்

477. தர்மீ: தர்மங்களைத் தாங்குகிறவர்

478. ஸத்: உண்மையே வடிவாகிய பரம்பொருள்

479. அஸத்: பெயர் வடிவில் மறைந்துள்ள பிரம்மம்

480. க்ஷரம்: தேயும் பொருளானவர். க்ஷர வடிவினர்

481. அக்ஷரம்: மாறுபாட்டை அடையாதவர். அக்ஷர வடிவினர்

482. அவிஜ்ஞாதா: அறிபவரல்லாதவர்

483. ஸஹஸ்ராம்சு: ஆயிரக்கணக்கான கிரணங்களையுடையவர்.

484. விதாதா: விசேஷமாய்த் தாங்குபவர்

485. க்ருதலக்ஷண: நன்கமைந்த லக்ஷணங்கள் உள்ளவர்

**கபஸ்திநேமி: ஸத்வஸ்த்த: ஸிம்ஹோ பூத மஹேச்வர: ।**
**ஆதிதேவோ மஹாதேவோ தேவேசோ தேவப்ருத் குரு: । 52 ।**

486. கபஸ்திநேமி: சூரிய மண்டல வடிவினர்

487. ஸத்வஸ்த்த: ஸத்வ குணத்தில் நிலைபெறுகிறவர்

488. ஸிம்ஹ: சிங்கம் போன்றவர். நரசிம்மாவதாரம் செய்தவர்

489. பூதமஹேச்வர: ஸத்தியமான முதல் ஈசுவரர்

490. ஆதிதேவ: தேவர்களனைவருக்கும் முந்தியவர்

491. மஹாதேவ: பெருந்தேவர்

492. தேவேச: தேவர்களின் ஈசுவரன் (ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமம்: 607 - தேவேசீ - தேவர்களுக்கு ஈசுவரி)

493. தேவப்ருத்குரு: தேவர்களை ரக்ஷிக்கும் இந்திரனுக்குக் குருவாகியவர்

**உத்தரோ கோபதிர் கோப்தா ஜ்ஞானகம்ய: புராதந: ।**
**சரீர பூதப்ருத் போக்தா கபீந்த்ரோ பூரிதக்ஷிண: । 53 ।**

494. உத்தர: ஸம்ஸாரக் கடலிலிருந்து கரையேற்றுபவர்

495. கோபதி: பசுக்களைக் காப்பாற்றுபவர்

496. கோப்தா: உலகங்களின் ரக்ஷகர்

497. ஜ்ஞானகம்ய: ஞானத்தாலேயே அடையத் தக்கவர்

